[7th March 1958

**Sri V. K. KOTHANDARAMAN** : சென்னையிலிருந்து ஆந்திரத் துறை முகம் வரையிலே இந்தக் கூவம் ஆற்றில் கப்பல் போக்கு வரத்திற்காக பரிசீலனை செய்ய ஏற்கனவே பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அந்தப் பரிசீலனை முடிந்ததா ? அப்படியானால் அதன் விவரம் கூற முடியுமா ?

**The Hon. Sri P. KAKKAN** : கூவம் நதியில் கப்பல் போக முடியாது (சிரிப்பு). சிறிய படகுதான் போக முடியுமே தவிர, பெரிய படகு போக முடியாது என்பதை கனம் அங்கத்தினருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**Sri T. P. ELUMALAI** : இந்தக் கூவம் ஏரியை (சிரிப்பு) மன்னிக்க வேண்டும், ஆற்றை ஆழமாகத் தோண்டி படகு போவதற்குத் தக்கவாறு திருத்தி அமைக்க வேண்டுமென்று சர்க்காரிலே நடவடிக்கை எடுப்பதாகத் தெரிய வந்தது. ஆகவே அதைப் பள்ளமாக ஆக்கி படகு போவதற்குச் சரியாக அமைத்துக் கொடுக்க முடியுமா என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

**The Hon. Sri P. KAKKAN** : கூவம் நதியை மிகவும் ஆழப்படுத்தி சமுத்திரத்திலிருந்து அலைகள் மூலம் முகத்துவாரத்திற்கு அப்புறப்படுத்தி கொண்டு வருகிற மண்ணையும் போக்குவதற்கு ஏற்பாடு செய்தால் படகு போவதற்கு முடியும் என்று எஞ்சினியர்கள் அபிப்பிராயம் கூறியிருக்கிறார்கள். இந்தத் திட்டத்தை எடுத்துக் கொண்டால், கார்ப்பொரேஷன் வாரித் தண்ணீரைத் தடுக்கவேண்டும். இப்போதுள்ள நிதி நிலைமையில் தற்சமயம் இந்தத் திட்டத்தை எடுத்துக்கொள்ள முடியாது என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

**Mr. SPEAKER** : Questions are over.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II.—CALLING ATTENTION TO A MATTER OF URGENT PUBLIC IMPORTANCE UNDER RULE 40 OF THE MADRAS ASSEMBLY RULES *RE* THE CLOSURE OF DALMIA CEMENT (BHARAT), LIMITED. DALMIAPURAM,

**Mr. SPEAKER** : கனம் லாஸர் அவர்கள் 40-வது விதிப் பிரகாரம் ஒரு பிரேரேபணையைக் கொடுத்திருக்கிறார்கள். சுருக்கமாகப் பேசவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**Sri A. VEDARATHNAM** : On point of order, Sir, சபையில் கேள்வி நேரம் மிகவும் முக்கியமான நேரம். அதற்காக ஒரு மணி நேர அவகாசம் அளிக்கப்பட்டிருந்தும்கூட, அந்த நேரத்தைப் பூராவாகப் பயன்படுத்திக்கொள்ள முடியவில்லை. அங்கத்தினர்கள் உப கேள்விகள் கேட்பதற்கு இன்னும் அதிக அவகாசம் கொடுத்து, கேள்விக்காக ஒதுக்கப்பட்டிருக்கிற ஒரு மணி நேரத்தையும் பயன்படுத்திக்கொள்ள அனுமதித்தால் அனுகூலமாக இருக்காதா என்பதைத் தலைவர்கள் முடிவு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**Mr. SPEAKER** : எனக்கு ஒன்றும் இதில் ஆட்சேபணை இல்லை. கேள்விக்காக அதிக நேரம் ஒதுக்கினால், அதிக அங்கத்தினர்கள் பொது விவாதத்தின்போது பேசமுடியாமல் போய்விடும். கனம் அங்கத்தினர் சம்பந்தப்பட்ட வரையில் இரண்டு நாட்களுக்கு முன்னர் பேசிவிட்டார்கள். அவர்களுக்கு கவலையில்லை (சிரிப்பு). ஆனால் இன்னும் பேசுவதற்குப் பல அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். அதை நினைவில் வைத்துக்கொண்டு தான் கேள்விக்காக நேரத்தை ஒதுக்கினேன்.

**Sri S. LAZAR** : கனம் தலைவர் அவர்களே, திருச்சி ஜில்லாவிலே, டால்மியாபுரம் பகுதியிலே, டால்மியா செமன்ட் கம்பெனி இருப்பதோடு கூட, '' போர்ஸிலேன் '' சாமான்கள் போன்று சில பொருள்களும் உற்பத்தி செய்யப்படுகின்றன. அங்கே வேலை செய்யக்கூடியவர்கள் சுமார் 4,400 பேர் இருக்கும். ஒரு சில மாதங்களுக்கு முன்பு நேர்மையான

சில கோரிக்கைகளை மானேஜ்மெண்டாருக்கு விடுத்திருந்தார்கள். அவைகளுள் முக்கியமானவை, மாத அடிப்படையில் ரூபாய் 30 சம்பளம் கொடுக்க வேண்டுமென்றிருந்த போதிலும் கூட, முழு நேரம் வேலை செய்தபோதிலும் கூட, சரியான முறையில் ஊதியம் கொடுக்கப்படவில்லை. அவர்களுடைய " லோடு " பூர்த்தியாகவில்லை என்ற முறையிலே சம்பளம் குறைவாகவே கொடுக்கப்பட்டது. முப்பது ரூபாய் சம்பளம் கொடுக்கவேண்டுமென்று கோரியிருக்கிறார்கள். இன்னும் " போனஸ் " கொடுப்பது என்று முடிவு செய்தபோது, எல்லாத் தொழிலாளர்களுக்கும் கொடுக்க வேண்டுமென்ற கோரிக்கையை விடுத்தார்கள். இன்னும் உபரிச் சம்பளம் கொடுக்கும்போது ஒரு பகுதியினருக்கு மாத்திரம் கொடுத்து, மீதியுள்ளவர்களுக்கு கொடுக்காமல் இருக்கக்கூடாது, எல்லோருக்கும் கொடுக்கவேண்டுமென்ற நேர்மையான கோரிக்கைகளை விடுத்திருந்தார்கள். மானேஜ்மென்டார் இவைகளை ஏற்றுக்கொள்ளாத காரணத்தினாலே ஒரு சிலர் ஸ்டிரைக் செய்ய ஆரம்பித்து அங்கே வேலை ஸ்தம்பிதம் ஏற்பட்டிருக்கிறது 5-2-58-ம் தேதி ஆரம்பித்த ஸ்டிரைக் ஒரு பகுதியிலே ஆரம்பித்து, 3, 4, பகுதிகளிலே பரவி, 27-2-58-ம் தேதி வரைக்கும் 550 பேர் " சஸ்பெண்டு " செய்யப்பட்டார்கள். பிறகு 439 பேர் நீக்கப்பட்டிருக்கிறார்கள். அதற்குப் பின்னர் சுமார் 800 கூலி ஆட்களை வேலையை விட்டு நிறுத்தியிருப்பதாகத் தெரிகிறது. இப்படிச் செய்கின்ற காரணத்தினால் வேலை கிடைக்காமல் இருப்பதோடு கூட, மீதமுள்ள 3,600 நபர்களைக் கொண்டு மானேஜ்மென்டார் தொழிற்சாலையை நடத்த முடியும். அதையும் நடத்தாது உற்பத்தியை நிறுத்தி வைத்திருக்கிறார்கள். இப்படிச் செய்கின்ற காரணத்தினால், தினசரி 1,000 டன் செமெண்ட் உற்பத்தி தடைப்படுகிறது. அதோடு வேலை செய்கிற ஒரு சிலருக்கு " லே ஆப் " கொடுக்கிற காரணத்தால், 300, 400 கூலி ஆட்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். இது விஷயமாக அவசர நடவடிக்கைகள் எடுத்து ஒரு நல்ல முடிவு காணவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, the Dalmia, Cement Workers' Union entered into an agreement relating to the revision of wages of certain categories of workers on 6th July 1957 before the Minister for Labour. This revision covered only a few of the categories of workers. Subsequent to this agreement, the Union has been demanding that the Kalasis who are in the grade of Rs. 55 should be given Rs. 8 in addition to their basic salary, instead of Rs. 4 already granted to them. The management declined to consider this demand as this was not one of the categories of workers included in the agreement. Certain Kalasis working in the shifts who were deputed to attend to the repairs in the Crane Section, were reported to have refused to do the normal duties on 1st February 1958. They also refused to work overtime even during emergencies. The workers in the Kiln Section declined to do their regular duties on the evening of 3rd February 1958. They were also reported to have prevented the other workers from doing their work. This was repeated again by the workshop workers as well as the Mill Section workers on the 5th February.

On the 6th February, the work in some sections went on in the morning shift. Normal work could not be carried on in the night shift due to the absence of the crane drivers in the Crushing Department. All the trucks loaded with limestone to feed the

crushing had to be parked in a line without unloading due to the absence of one of the loading Mazdoors. Thus, there was concerted stoppage of work in each and every section of the Factory.

The Labour Officer, Tiruchirappalli, who visited the factory on the 7th, also saw some batch of fitters in Kiln section sitting idle without attending to the work. Some of the workers also seem to have stated that they were prevented from doing work. Despite the advice of the Labour Officer, the workers continued to remain idle without doing normal work.

Both the Dalmia Cement Workers' Union, Dalmiapuram, and the Dalmia Industries Workers' Union, Dalmiapuram, were also telegraphically advised by the Commissioner of Labour on the 6th and 8th February 1958 to work normally, without detriment to normal production pending enquiry by the Labour Officer into their grievances, if any. This also did not improve the situation.

As a result, there has been complete cessation of work from 10 a.m. on the 8th February in the Factory, Quarry and other allied Departments. The situation is however calm and peaceful. Since this Statement was prepared, I understand that the Union and the Management are carrying on negotiations and the situation is slowly returning to normalcy.

The Government are carefully watching the developments and will assist the parties to resolve their differences peacefully.

### III.—PRIVILEGE MOTION *RE* : MISREPRESENTATION IN THE PRESS OF A MEMBER'S SPEECH.

1–50 p.m. **Mr. SPEAKER** : கனம் அங்கத்தினர் அன்பழகன் அவர்கள் ஒரு உரிமைப் பிரச்னையை எழுப்ப விரும்புகிறார்கள். அவர்கள் என்ன பேசவேண்டுமோ அதைச் சுருக்கமாகப் பேசுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

* **Sri K. ANBAZHAGAN** : மதிப்பிற்குரிய அவைத் தலைவர் அவர்களே, இந்த சட்ட மன்றத்தில் கடந்த **3**-ம் தேதி நிதி நிலை அறிக்கையைப் பற்றிய விவாதத்தில் நான் கலந்து கொண்டு பேசிய பேச்சின் கருத்துக்களை, உண்மைக்கு மாறாகவும், நீதிக்குப் புறம்பாகவும் ஒரு பத்திரிகையில் வெளியிட்டு இருக்கிறார்கள். நான் அங்கே பேசிய கருத்துக்களுக்கு மாறான எண்ணத்தைப் பொது மக்களிடத்தில் தோற்றுவிக்கவும், என்னுடைய கருத்துக்களிலே பொதுமக்கள் குறை காணவும், அந்தப் பத்திரிகை வழி செய்திருக்கிறது. அதைப்பற்றிய செய்தியைத் தங்களிடத்தில் தெரிவிப்பதின் மூலமாக தக்க ஒழுங்கு நடவடிக்கையை " **Privilege Committee** " மூலமாக எடுத்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அது குறித்து மேலும் பேசுவது அவசியம் இல்லை என்று கருதுகிறேன். பதிவு செய்யப்பட்ட பேச்சையும், பத்திரிகையில் வெளி வந்த செய்திகளையும் நான் தலைவர் இடத்தில் தந்திருக்கிறேன். தக்க நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அப்படி வெளி யிட்ட பத்திரிகை " ஜனசக்தி " நாள் இதழ். அந்த இதழில் வந்துள்ள செய்தி என்னுடைய பேச்சுக்கு முற்றிலும் முரணானது, மாறுபட்ட கருத்தைத் தந்திருக்கிறது. இதுபற்றி தக்க நடவடிக்கை எடுக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

**Mr. SPEAKER** : இந்த **Motion** என்னிடத்தில் இப்பொழுது தான் வந்தது. அதை யோசித்து நாளைக்கோ அல்லது நாளை மறுதினமோ பதில் அளிக்கிறேன்.